11th December 1961]

**SRI T. IRUSAPPAN :** தலைவர் அவர்களே, அவர்கள் வைத்திருக்கக்கூடிய பாத்திரங்கள், ஆடு மாடுகள் போன்றவைகள் ஏதாகிலும் இதற்காக ஜப்தி செய்யப்பட்டிருக்கிறதா ? இம்மாதிரி புகார் ஏதாவது வந்திருக்கிறதா ?

**THE HON. SRI C. SUBRAMANIAM :** அந்தமாதிரி எவ்விதமான புகாரும் வரவில்லை.

*Ongur river (Irrigation)*

2240-D *Q.*—SRI M. JAGANNATHAN : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) whether the Government have received a petition, dated 23rd April 1961, from the ryots of the village of Vellankonda-Agaram regarding the utilization of the waters of the Ongur river for irrigation purposes; and

(*b*) if so, the action taken thereon?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) No, Sir.

(*b*) Does not arise. Plans and estimates for an anicut across Ongur river near Arasur are however under scrutiny.

*New High School (Gudiyatham taluk).*

* 2240-E *Q.*—SRI V. K. KOTHANDARAMAN : கனம் நிதி அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) கனம் முதல் அமைச்சர் அவர்களுக்கு ஜூலை 18, 1961-ல் வி. கே. கோதண்டராமன், எம்.எல்.ஏ., அவர்கள்மூலம் குடியாத்தம் தாலூக்காவில் மோட்டூர், வளத்தூர், செம்பள்ளி, குடியாத்தம் டவுன்களில் உயர்தர பாடசாலைகள் ஏற்படுத்துவது விஷயமாக எழுதப்பட்ட லெட்டர் சேர்ந்ததா ?

(இ) அப்படியானால், அதன்மீது எடுத்துக்கொண்ட நடவடிக்கை என்ன ?

THE HON. SRI C. SUBRAMANIAM : Yes, Sir.

(*b*) A high school has been permitted to be opened at Valathur. The Government have not received proposals either from District Board (since defunct) or from the Director of Public Instruction regarding the opinion of a high school at S. Mottur. The proposals for the opening of high schools at Sempalli and Gudiyatham town were not approved by the Government.

**SRI V. K. KOTHANDARAMAN :** ஸார், வட ஆற்காடு ஜில்லாவிலே இருக்கக்கூடிய 11 தாலூகாவிலே மிக அதிகப்படியான ஜனத்தொகை கொண்டது குடியாத்தம் தாலூகா. அப்படி இருக்கும்போது மற்ற தாலூகாக்களைவிட பத்தாவதான நிலையிலே ஏழு ஹைஸ்கூல்கள்தான் இந்த தாலூகாவில் இருக்கிறது. மற்ற தாலூகாக்களில் 10, 12, 15 என்றிருக்கிறது. இதுபோன்ற பாகுபாடு காட்டக்கூடிய முறையிலே அனுமதி கொடுப்பதற்கான காரணம் என்ன ?

[11th December 1961

THE HON. SRI C. SUBRAMANIAM : எங்கு பள்ளிக்கூடத்திற்கு வரக்கூடிய குழந்தைகள் எண்ணிக்கை அதிகமாக இருக்கிறதோ, அங்கு ஹைஸ்கூல்கள் திறக்கப்படுகின்றன. தவிர, கீழ்வகுப்பிலே போதுமான குழந்தைகள் இல்லாவிட்டால், ஹைஸ்கூல்கள் மட்டும் ஏற்படுத்தி விடமுடியாது. ஆகவே, 7, 8-வது வகுப்புகளிலே அதிகப்படியான குழந்தைகள் எவ்வளவு இருக்கிறதோ, அதற்குத் தகுந்தாற்போல் ஹைஸ்கூல்கள் விஸ்தரிக்கப்படும்.

SRI V. K. KOTHANDARAMAN : ஸார், எஸ். மோட்டூரில் 300 மாணவர்கள் இருந்தும் அங்கு அனுமதி கொடுக்காமல், 100 மாணவர்கள் இருக்கக்கூடிய இடத்திற்கு அனுமதி கொடுக்கப்பட்டிருக்கிறது. ஆகவே இதுபோன்று அதிகப்படியான மாணவர்கள் இருந்தாலும், அந்த இடத்திற்கு சில காரணங்களால் அனுமதி கொடுப்பதில்லை என்பதுதான் குறை. அதிகாரிகள்கூட பார்வையிட்டு, ரொம்பவும் கன்சிடர் பண்ணி சிபார்சு செய்திருந்தாலும் கூட, மேலிடத்தில் அமைச்சர்களிடம் வரக்கூடிய நேரத்திலே தனிப்பட்டவர்கள் வேண்டியவர்களாக வரும்போது, அனுமதி மறுக்கக்கூடிய நிலை ஏற்படுகிறது.

DEPUTY SPEAKER : The hon. Member may put his question instead of making insinuations.

THE HON. SRI C. SUBRAMANIAM : இன்சினிவேஷன் வேண்டாம். நான் இப்போது படிப்பதை தயவுசெய்து கேட்கவேண்டும். டிஸ்டிரிக்ட் போர்டு இடத்திலிருந்து எஸ். மோட்டூருக்கு ஒரு ஹைஸ்கூல் வேண்டுமென்று கேட்ட மனு வரவில்லை. ஆகவே, இதிலே தனிப்பட்டவர்களுக்குச் செய்கிறோம் என்றப் பிரச்னையே எழவில்லை.

SRI C. NATARAJAN : தலைவர் அவர்களே, இப்படிப்பட்ட உயர்நிலைப் பள்ளிகள் வேண்டுமென்று என் தொகுதியாகிய கள்ளக்குறிச்சியிலே இருந்து பல மனுக்கள் அரசாங்கத்திற்கு . . .

DEPUTY SPEAKER : The main question relates to North Arcot district and not to South Arcot district. So, the hon Member may resume his seat. I pass on to the next question

*Engineering Course (Admission)*

2240-F *Q.*—SRI T. S. RAMASWAMI : Will the Hon. the Minister for Finance be pleased to state—

(*a*) the number of applicants belonging to the Scheduled Caste, Backward Class and other classes from each district for the first year Engineering Degree course in 1961; and

(*b*) the number selected from each district;

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) & (*b*) A statement[a] is placed on the table of the House.

[a] Printed as Appendix II on pages 484 infra.